# கபிலை காவியம்





மா. வ. நல். குப்புசாமி முதலியார்

சிவமயம்

# கபிலை காவியம்

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதைய[illegible]
[illegible]

தொண்ணூறு பாடசாலை உபாத்தியாயர்
மாமண்டூர் வடபாதி
நல் - குப்புசாமி முதலியார்
இயற்றியது


சாது அச்சுக்கூடம், சென்னை.
1922

# முகவுரை

பசுவைத் தெய்வம்போலப் போற்ற வேண்டுமென்பது நமது கொள்கை. பசுவினிடம் எல்லாத் தேவர்களும் இருக்கின்றார்கள் என்று தர்ம சாத்திரங்கள் கூறுகின்றன. பசுவை மேய்த்தும் பூசித்தும் நாடோறும் அதற்கு அறுகு முதலிய கொடுத்தும் சுவர்க்க மடைந்தோர் பலர். இத்துணைச் சிறப்புவாய்ந்த ஆவைப் பற்றிப் பாக்கள் யாக்கவேண்டுமென்று எனது உள்ளத்து ஓர் அவா எழுந்தது. அவ்வாவினைப் புழுதிவாக்கம் ம-ள-ள-ஸ்ரீ குமாரசாமி ரெட்டியார் அவர்களுக்குத் தெரிவித்தேன். அவர் ஊட்டிய ஊக்கத்தால் "கபிலை காவியம்" என்னும் இந்நூலைப் பாடிமுடித்தேன். இந்நூலில் கோவின் பெருமை ஓதப்பட்டிருப்பதோடு ஒரு பசுவும் புலியும் சத்தியங் காத்தவரலாறு இடையே சேர்க்கப்பட்டிருக்கிறது. அக்கதையில் அமைந்துள்ள சத்தியநெறி கவனிக்கற்பாலது.

யாப்பில் பெரும் பயிற்சி இல்லாத யான் பாடிய இக்காவியத்திலுள்ள குற்றங் குறைகளைப் பொறுத்தருளுமாறு அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்டுப் பிழைகளைந்தபோது எனக்கு உதவி புரிந்த தேசபக்தர் ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களுக்கு என்றும் நன்றியறிதல் உடையேன்.

ஜ. தொண்ணூடு,
15-9-32.

நல் - குப்புசாமி

சென்னை இராயப்பேட்டை,

ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபைத்தலைவர்

## திருமிகு-திரு. வி. உலகநாத முதலியார் அவர்கள்

கூறியது

---

விண்ணாடு கடவுளர்கள் யாவருமே
தம்முருவில் விளங்கக் காட்டிப்
பண்ணாடு மறைமுதல்வ னுகந்தாடு
மைந்தினையும் பரிவாய் நல்கும்
மண்ணாடு மக்களன்னை யாங்கபிலை
காவியத்தை மகிழச் சொற்றான்
தொண்ணாடு குப்புச்சாமிப்புலவன்
கங்கைகுலத் தோன்றல் மாதோ.

# கபிலை காவியம்

---

விநாயகர் துதி

வெண்பா

தேளிரையிற் காரொன்றின் தெய்வீகச் சத்தியத்தை
மாநிலத்தோர் கேட்டு மகிழுறவே—யானுரைக்கக்
கோடுடைத்துத் தானவனைக் கொன்றுபத மீய்ந்தகரி
பீடுடைய சேவடியைப் பேண் (௧)

சிவன்மால் வாணி துதி

கட்டளைக் கலித்துறை

கோவினைக் காந்தனைக் கேதன வூர்தியாய்க் கொண்டவனும்
ஆவினை மெய்த்ததை வையமாய்க் கொண்ட வரியவனும்
நாவிலே வாழ்கின்ற நான்முகன் பாரியை நாடியிந்தக்
காவியங் கூறிற் கழிப்பின்றி நாநின்று காட்டுவரே (௨)

கதை கேட்டவர் கூறியவர்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

பொடிபுரி தன்னில் மேவும் பொற்புறு குமார சாமி
கடிகதி கபிலை வாச காவியங் கேட்க மாவை

---

(௧) தானவன் - கயமுகாசூரன், கரி - விநாயகர்,

(௨) கேதனம் - கொடி, ஊர்தி - வாகனம், வையம் - வாகனம், கழிப்பு - பிழை.

(௩) பொடிபுரி - புழுதிவாக்கம், கடி - சீக்கிரம், கதி - மோட்சம்.

வடபதி சுப்ப ராயன் வழியினல் குப்பு சாமி
படி யுளோர் கற்கப் பாவாய்ப் படித்தனன் பதங்கள் கூட்டி (கூ)

பாடின காலம்

தூயவங் கிலவா யிரத்துத் தொளாயிரத் திருபத் தொன்றில்
நேயதுன் மதியா மாண்டு நிகழுதே ளிருபத் தைந்தில்
வாயச வூர்தி பூர்வம் வருந்தசத் திதிமீன் சூல
மாயமான் வச்சி னத்தி லாக்கதை தொடங்கி னேனே (ச)

அவை யடக்கம்

உற்றதன் குறையை நீக்க வுயரணங் காரைப் போற்றிச்
சுற்றிய பவந்தொ லைந்து சுகப்படுந் தன்மை போலக்
கற்றவர் தமைத்து தித்துக் கார்நிறை கதையைக் கூறிற்
குற்றமுங் கவளயு முண்மைக் குசலரைத் துதித்துச் சொன்னேன்

ஒளியினி யொளியைக் கண்ட வுயர்விலா வலகு தன்னி
ஞெளிபெரி தென்று காட்டு மூழுபோல் மேலோர் செய்த
களிகவி வண்மை கண்டு கருத்திலா வடியேன் கூறு
மெளிகவி தன்வை மிக்கோ ரினமெனக் கொள்வர் மாதோ (கூ)

நூல் வரலாறு

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அரவுயிர்த்தோ னெளவியத்தை யகத்திற் கொண்டே
வறத்தின்சே யுடன்சூதே யாடி வாடும்
பொறையுடைய வைவரையும் வனத்தி லோட்டிப்
புகர்தவவண கடந்தற்ற லுங்கள் நாட்டைத்

(ச) தேள் - கார்த்திகை, வாயசம் - காக்கை, தசம் - பத்து, மீன் - நட்சத்திரம், சூலம் - ரேவதி, மான் - மகரம்.

(ரு) குசலர் - மேலோர்.

(கூ) ஒளி - விளக்கு - பிரகாசம், அலகு - மின்மினிப்பூச்சி, ஊழ் - குணம், மேலோர் - அறிஞர், எளி - பரிகாசம்.

திறமுடனே யடைவிரேனச் சொல்லிப் பின்னுற்
றிரும்புகையிற் றருகாம லுத்தந் செய்தே
உறவோடே சதமகர்க ளருண்டு போக
வுதிட்டிரனுந் தம்பிகளோ டுலகை யாண்டான் (எ)

பாண்டவர்கள் நிலவுலகைப் பரிக்கு நாளிற்
பரதகுலத் துதித்தமச்ச கந்தி தன்னுற்
காண்டகந்தன் டேனுதித்த வியாச னென்போன்
காணத்தன் பவுத்திரரைக் கடிது நாடப்
பாண்டுமைந்தர் கேள்வியுற்றங் கெதிரே சென்று
பரிவோடே வழைத்திருத்திப் பாதம் போற்றி
நீண்டவிரு கரமுச்சி கூப்பி நிற்கும்
நெறியாரைப் பார்த்துமுனி நிகழ்த்த லுற்றான் (அ)

வேறு

வியாசரும் பேரன் மாரை வீற்றுமே யிருக்கச் செய்தே
யயாதியின் வழியில் வந்த வரசரி னேறே கேண்மோ [ண்டு
வியாதியாம் வாழ்வை யெண்ணு விரும்பிசூள் நெறியாய்க் கொ
கியாதியை யடைந்த சத்ய கிட்டித்தேன் கதைகே ளென்றார்

உத்தர பூவிற் காம்பி யூரினிற் பகிரன் றன்னுற்
சத்திய தவங்கட் செய்து சரிந்ததூர் கங்கை யுத்ர
நத்தியக் கரையிற் றெய்வ நாயக புரமொன் றுண்டால்
அத்தலந் தன்னி னுன்கு வழதள குடிக ளம்மா (௧0)

அந்தணர் தொழில்க ளாறு மழதறச் செய்து தந்தந்
சொந்தமாங் குலத்திற் கேற்பச் சொன்மறை தியானஞ் செய்து
பந்தமும் பாசம் நீக்கிப் பரஞ்சுடர் தன்னைச் காணுஞ்
சிந்தனை யுள்ளா ராகிச் சீருடன் செறிந்து வாழ்வார் (௧௧)

---

(௯) சூள் - சத்தியம், கியாதி - மேன்மை, கீர் - சொல்லல்.

(௧௧) தொழில் ௬ - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

அப்பதி தன்னில் வாழு மரசருஞ் செங்கோ லோச்சி
யிப்பதி போல வெங்கு மிலையெனப் பலருங் கூற
ஒப்பியே குற்ற மெட்டு மொழிந்துதன் பேறு வேழுந்
தப்பித மின்றிக் காத்துத் தனித்தொழி லாறுங் கூட்டி (௧௨)

பெருங்குழு வைந்து மைந்து பெருங்கிளை யங்க மாறு
திருந்திய வங்கம் நான்கு திறமர ணிரண்டி ரண்டாம்
பொருந்திய பொருள்க ளோங்கப் புகழ்பெற மதியில் மூன்று
வருந்துளி தன்னால் நாடு வளமடைந் திருந்த தம்மா (௧௩)

வணிகரின் தொழில்க ளாறும் வினைஞரின் தொழில்க ளாறும்
அணிபெற வோங்கி நாளு மந்நகர் பொலிவு கொள்ளக்
கணிகையர் வீதி தன்னிற் கலந்திசைக் கருவி யார்ப்பப்
பிணிகெட வாழு மன்னோர் பெருமைகள் பலவு மாமே (௧௪)

ஆலய பூசை நாளு மருமறை கூறு மாபோல்
சீலமாய் நடத்தி மேலோர் சிறுபய மின்றி வாழுங்
காலையில் யாச கர்க்குக் கண்டதை நல்கி மேலாஞ்
சாலையி லுண்டி நாளுஞ் சலிப்பிலா வளித்துக் காப்பார் (௧௫)

---

(௧௨) குற்றம், ௮ - விட்டில், தன்னரசு, யானை, மிகுமழை, அதிக காற்று, நட்டம், அன்னியவரசர், கிளி. பேறு - ௭ அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, மறுமை. தொழில், ௬ - ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படை பயிலல், போர் செய்தல்.

(௧௩) குழு, ௫ - மந்திரி, புரோகிதன், தூதன், ஒற்றன், சேனாதிபதி. கிளை - சுற்றம் ௫ - படைத்தொழிலாளர், நிமித்தம் பார்ப்பவர், ஆயுள்வேதியர், நட்பாளர், அந்தணர். அங்கம், ௬ - படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண். அங்கம், ௪ - ரத, கெஜ, துரக, பதாதி. அரண், ௪ - காடு, மதில், நீர், மலை.

(௧௪) வணிகர் தொழில் ௬ - ஓதல், வேட்டல், வேளாண்மை வாணிபம், உழவு பசுகாத்தல். வினைஞர் தொழில் ௬ - ஓதல், வேட்டல், ஈதல், பயிரிடல், பசுகாத்தல், உதவி புரிதல்.

ஐந்தெனும் பொருளில் நான்கு வளமிலாக் கிடைப்ப தாலும்
பந்தியாய்க் கூலந் தன்னிற் பலபொருள் வெளிதே யத்துச் |துச்
சிந்துமேல் மண்ணின் மேலுஞ் செல்வருங் கொணர்ந்து சேர்த்
தந்தசஞ் சந்தை போலச் சரிவில பகர்வா ரம்மா (க௬)

கொடுப்பவர் கொள்ளு வோர்கள் கூச்சலு மொருபா லோங்க
முடுக்கிய ரதத்தி னொரை மூரிவில் முழக்கங் காட்ட
அடச்சியு மிறி யோடு மத்திரி யார்ப்பு நீரைத்
தடுத்திடு மள்ளர் சும்மை தாழ்ந்திடாக் குரவை யோதை (க௭)

அங்கந ரெழிலைக் கண்டே யழுக்கது கொண்டு வானில்
பொன்னகர் போயிற் றென்றுற் புகல்வென் னாவு காணு
மின்னிடும் வாழ்க்கை நோக்கி வெருவியே தனதன் றுனுங்
கண்ணொளி மழுங்கி நின்றார் காசினி பெருமை காண்பாய் (க௮)

அவ்வணம் நிலவி யோங்கு மந்நகர் தன்னி லோர்பா
லெவ்வியங் கடிந்து வாழு மந்தணர் வாச மென்னும்
நவ்வியோ ரகர முண்டு நன்கதில் வாழு நூலோர்
செவ்விய வெவ்வே றுண சீர்குலஞ் செறிந்த வீதி (க௯)

ஆச்சிர மங்க ளோங்க வறங்களெல் லுண்டு மோங்கப்
பாச்சுநெய் தூம மோங்க பள்ளியில் மறைக ளோதுங்

---

(க௬) ஐந்தெனும் பொருள் - ஐந்தைந்து வடங்கிய பொருள் ௫ - நகர்படு திரவியம், நாடுபடு திரவியம், காடுபடு திரவியம், கடல்படு திரவியம், வரைபடு திரவியம் ஆக ௫ - இதில் நகர்படு திரவியம் நீங்க - மீதி நான்குமாம். நாடுபடு திரவியம் - செந்நெல், பயறு, வாழை, கரும்பு, இளநீர் - ஆக - ௫. காடுபடு திரவியம் - அரக்கு, இறால், தேன், மயிற்பீலி, சாயி ஆக - ௫. கடல்படு திரவியம் - உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை - ஆக - ௫. வரைபடு திரவியம் - மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம் - ஆக - ௫.

(௨௦) தூமம் - புகை, வாச்சியம் - வாத்தியம்.

கூச்சலு மோங்க மாரி கூர்த்தடு மொலியு மோங்க
வாச்சிய மணைத்தி ஞேசை வாடிடா தொலிக்குஞ் சேரி (உ0)

திருக்குசம் பறிப்பார் சில்லோர் தாலியாய்ந் தேடுப்பார் சில்
[லோர்
விருப்பமாய்ப் பவுத்ரக் கூர்ச்சம் விரைவுடன் முடிப்பார் சில்
[லோர்
கருத்துடன் கதலிபத்ரக் கரகமுஞ் செய்வார் சில்லோர்
சுருக்குடன் யாக குண்டஞ் சுத்தியுஞ் செய்வார் சில்லோர் (உக)

சமுதுக ளொடிப்பா ரோர்பாற் சதனமும் பறிப்பா ரோர்பா
லமுதுடன் படைப்ப தற்கு வளிகனி காய்கள் கொய்வார்
குமுதமு முளரி யோடு குவிமலர் பறிப்பா ரோர்பா
லமுதமா மிழுது கொள்வா ரக்கினி வளர்க்க வோர்பால் (உஉ)

விரையுள சாந்தத் தோடு வேரிகள் கூட்டு வாருங்
கறையிலாக் கோவா லைந்து களித்துமே தேட்டு வாரு
மறையினு ளைய மெல்லா மகிழ்ந்துமே காட்டு வாரு
முறைசில பெரியோர் கூற வூக்கமாய்க் கேட்பா ரோர்பால்(உங)

மாரியில் மூழ்கு வாரும் மாறுக முலர்த்து வாருஞ்
சாரியாய் மோன மந்தரச் சங்கற்பங் கூறு வாரும்
வேரிமண் பூதி சாந்தம் விளங்கிடப் பூசு வாருங்
கூறியே பூசை யெல்லாங் குறைவிலா முடிப்பா ரோர்பால்(உச)

அழல்திரு கூட்டு வாரு மரியரன் கதைக ளான
பழமொழி புராண சாத்ரப் பந்தமு மோது வாருக்

(உக) பத்ரம் - இலை, கரகம் - கிண்ணம், தொன்னை,

(உஉ) சதனம் - இலை, இழுது - நெய்.

(உங) விரை - வாசனை, வேரி - வாசனை, கோவாலைந்து - பஞ்சகவ்யம்.

(உச) மாரி - நீர், மாறுகம் - சீலை, மண் - திருமண், பூதி - விபூதி.

(உரு) திரு - மூன்று, பந்தம் - பிரபந்தம்.

தொழுதிடும் வருணத் தார்க்குத் தூய்மனஞ் செய்தல் வேள்விப்
பழுதிலா வாசீர் வாதம் பட்சமாய்ச் செய்வா ரோர்பால் (உ௬)

இத்தொழில் நடத்தி வந்தவ் வீதியின் மறைவ லாளர்
உத்தமச் சூர்க ளென்னு முயர்பசுக் கூட்டஞ் சேர்ந்த
மொத்தமா யைந்நா றுன முதுநிரை மேய்த்துக் காக்கச்
சத்தியன் வேண்டு மென்ற சாலையில் பார்த்தார் நூலோர் ()

பராசரின் மைந்தர் தாளைப் பாண்டுவின் மைந்தர் போற்றிச்
சராசரம் போற்றும் நாதா சத்தேனத் தேவைச் சொன்னீர்
தராதலத் துள்ளோர் கேட்கத் தனிப்பொரு ளருள்வீ ரென்ன
கராகடிந் தோன்றல் காத்தோன் கழலடி பூண்டாய் கேண்மோ

வேறு

ஆவினது வடிக்கோட்டி னரியயனு முனைக்கோட்டிற்
கூவிவரு நதிசாமுங் குன்றைவில்லி மத்தகத்திற்
தாவிசத்தி யிடைநுதலில் தனிமுருகன் நாசிநுனி
காவலெண்ம ருள்நாசிக் கன்னத்தி லசுவனிகள் (உஅ)

மதிபானு விருகண்கள் மாருதன்பல் நாவருணன்
உதயம்நள் ளத்தமனம் உதடிதயங் கலைவாணி
கதயியம னியக்கர்கள் கபோலமாங் கழுத்தினரன்
பதியருக்கர் முசும்பிலே பாருரத்திற் சாத்தியர்கள் (உ௯)

நாற்றுளி லநிலவாயு நாகலோ கங்குளம்பு
கார்குழலார் மேற்குளம்பு கந்தருவர் குளம்பிநடு
போற்றுமழல் மூன்றுமே புகழ்வயிறு விதயமுகம்
சாற்றுருத்தி ரரபரஞ் சந்தட்ட பாம்புகளாம் (௩0)

---

(உஅ) கன்னம் - காது.

(உ௯) மாருதம் - காற்று, இதயம் - மனம், கபோலம் - கதுப்பு, உரம் - மார்பு.

(௩0) கார்குழல் - தெய்வமாதர், அபரம் - முதுகு.

பிதுரர்கள் ஸரைப்பையில் பெண்ணெழுவர் பாங்குகளில்
குதந்திருவாங் தேவர்வால் கூறுமோளி வால்மயிரில்
நதிகங்கை கோசலமும் நல்யமுனை கோமியமாங்
கதமில்பூ மகள்மோடு கதுப்பில்மா தவராமே (௫௧)

பறவைகளும் பரம்பதனில் பத்தினிக ளவயவத்திற்
குறையின்றி வாழவதாற் கோவேகோ குமைனத்தும்
மறையுந்தெய் வதமென்று மகிழ்ந்துரைக்கு மாதலினால்
தறையதனில் முறையோடு தற்பரனென் றேற்றுகிறார் (௫௨)

வேறு

சோமகிமை கண்டல்லோ கோவிந்தன் கோவிறங்கி
யாவினங்கள் மேய்ப்பதற்கே வாயரிடந் தானடைந்து
பாலிசைக்கக் குழலூதிப் பசுகாக்க வான்வாழுங்
கோவிடுத்த குயின்தடுத்துப் கோபால னாகின்றான் (௫௩)

நிரையடித்த கோன்கடிந்து நிரைகுலத்தை மேயக்க
புரையில்லா மெய்யர்குலப் புகழ்விசா ரசருமர் [வெண்ணெட்
கறையில்லா மனத்தினொடு காலிகாத்துப் பெயர்நீக்கி
விரைசண்டே சுரனென்று விண்ணமர்ந்து வாழ்ந்திருந்தான்

வேறு

பெற்றமும் பலவா னாலும் பேசுமிக் கபிலை போல
நற்றவஞ் செய்து வந்த பசுவிலை மன்ன கேளும்
செற்றிய சுரைசெ ருத்தல் சிறுவிழி யிதழ்க ளுத்தே
உற்றது புத்தேள் தேனு வுறுபெயர் கபிலையாமே (௫௪)

---

(௫௧) திரு - சீதேவி, கதம் - கோபம், மோடு - வயிறு
கதுப்பு - மயிர்.

(௫௨) பரவை - கடல், பரம்பு - முலை, தற்பரன் - கடவுள்

(௫௩) கோ - பசு - ஆகாயம், குயின் - மேகம்.

(௫௪) செற்றிய - நெருங்கிய, சுரை - முலை, செருத்தல் -
மடி, இதழ் - உதடு.

இக்குறி கலிலே யொன்று மிரைக்துமே யிருள டைந்தா
லக்குறி யுள்ள கோயு மலங்குறு தெய்வ மாகு
மோக்கவிப் புவியி லக்கோ வுறுவது கட்ட மாகு
மக்குறி முழுதும் வாய்ந்த வாவிது வறிவாய் மன்று (௩௬)

வேறு

பலபெருமை வாய்ந்தவந்த பசுமங்கை மெய்ப்பவர்தங்
குலம்வந்த மெய்விரதக் குடிவிணை ஞானம்பவனைப்
பொலங்கொண்ட பெற்றமதைப் பூரிப்பாய் மேய்க்கவைத்து
நலமுள்ள மதிப்படியும் நாள்வட்டங் கூறமைத்தார் (௩௭)

விலையுயர்ந்த கம்பளமும் விருப்பம்போல் வற்சரத்திற்
கலையொன்றும் பெறவென்று காவலயவன் குடியிருக்க
விலைகுறைந்த சிற்றில்லம் வேய்ந்துதங்கள் கூலைத்தி
லியையுள்ள நாமத்தை நிகழ்த்திஞர் மறையவர்கள் (௩௮)

வேறு

காமாட்சி மீனாட்சி கமலாட்சி தாரையாம்
பூமாட்சி விசாலாட்சி புநிதவன சாட்சியென்றும்
ஏகாம்பி கைஜெனக மேர்வடிவாம் பிகையென்றும்
சீமாட்டி யபிராமி செல்வியான் டாளென்பார் (௩௯)

வெங்கடலட் சுமியாம் வேதவல்லி மோகாம்பாள்
கங்கையிங் திராணியாம் கல்மைரா வதியென்றும்
பொங்குமை ராவதமாம் புலோமிசை சரஸ்வதியாம்
பங்கஜமும் நர்மதாவாம் பார்வதிகோ தாவரியாம் (௪௰)

துங்கபத்ரி காவேரி துரைரங்க சானியாம்
அங்கம்மாள் சொக்கம்மை யலர்மேலு சுபத்திரையாம்
தங்குகம லாலயமாந் தாயாராந் சித்ரரேகை
பெங்கும்பேர் சுப்பம்மா ளெல்லம்மாள் மாரிமுத்தாம் ( )

அற்புதமுள் முத்தாயி யழகுவள்ளி யருந்ததியாம்
விர்தாச லங்குமரி விரைதாம்ர பரணியாம்

பிர்மரத்னங் கௌரியாம் பேசாம டந்தையாம்
கற்பகமும் பாரிசாதங் காமவல்லி ச்ரேளபத்தையாம் (௪௨)

மண்டோத ரிசெல்லம் மாணிக்கஞ் சீதேவி
வண்டாருங் குழலியாம் வடமலையு மேனகையா
முண்ணுமு லரம்பை யூர்வசிதி லோர்த்தமையாம்
பெண்ணமுது நாயகமாம் பிழையில்லா வஞ்சுகமாம் (௪௩)

திருச்சடையன் தாயையாந் தெய்வசிகா மணியிவளாந்
திருத்துளாய் வல்லியாந் திருவேங்க டந்தையம்
மருத்வதியும் வாசுகியாம் மாசில்சந் திரவதியாம்
பெருந்தேவி யிந்த்ரரேகை பெயர்தெய்வ யாணையாம் (௪௪)

செந்தாமரை குமுதஞ் ஜீவரேகை ரத்தினமாம்
அந்தமுள சுயம்புவல்லி யல்லியர சாணியாம்
மந்தாரஞ் சித்திராங்கி மச்சரேகை மரகதமாம்
சிந்தாம ணிசுவாலா சிங்காரம் ராதாவாம். (௪௫)

தான்யதன ரேகையாந் தனிரத்ன நாகரமா
மான்ராஜ ரத்தினமா மகேசம்பெ யர்வாய்ந்த [மென்று
தேன்நிரையைக் கோவினஞா தெரிந்தவணைக்க வேண்டு
மான்றேனு ணைகின்ற மறையவருங் கூறினரால் ()

வேறு

கோக்குலந் தன்வண நாளுங் குறைவின்றி மேய்ப்ப தற்கே
யூக்கமுங் கொள்வே னீங்க ளுரைத்தசொல் வழுவி டாமல்
காக்கவே வேண்டு மென்று கைக்கழி கரக மேந்தித்
தூக்கியே கம்ப ளத்தைத் தூநிரை வடபால் விட்டான். (௪௭)

அதுமுதல் நாளு நாளு மாக்கவ புற்கள் வாய்ந்த
பதுவினி லோட்டி மேய்த்துப் பருகநீர் வேவள யாகக்
கதுமெனக் காட்டி யாட்டிக் கைப்பணி கூட்டி மேலாம்
புதுமணி கம்பு கச்சை புகழ்பெற வாவுக் கிட்டான் (௪௮)

(௪௮) கம்பு - பாலாடை, கச்சை - கயிறு.

தன்னுயிர் போலப் போற்றித் தபனனி னழல்த டுக்கத்
துன்னிய துருமங் கீழே தூயகோ வினங்க ளோட்டி
நின்றபின் மேய்த்து வெக்கை நீடிய வெதும்பை மாரி
நன்றிலா வடைப்பான் கட்டி நாடிடா வாத ரித்தே (௪௩)

அந்தியில் மந்தை யோட்டி யந்தணர் சொல்லைப் போலச்
சந்தரச் சோலை மேட்டிற் சோர்விலாச் சேர்க ளாட்டிச்
சந்ததங் காவல் யோட்டிச் சலிப்பிலா மேய்க்க நாளும்
பந்தமுள் பாலை மிக்கப் பசுக்களும் பொழியப் பார்த்தார் (௫௦)

இருபிறப் பாள ரெல்லா மெழுச்சியும் பொங்கக் கொண்டு
தொறுவனுக் கதிக மாயோர் தாசியும் படியுங் கூட்ட
மருவுமா கள்வ ரின்றி மற்றவன் காக்கு நாளில்
திருவது வோங்கு மாபோல் தேன்களும் பறழ்க ளின்று (௫௧)

தாய்நிரை முன்னே செல்லத் தாவியே குறளை யெல்லாம்
வாய்திறந் தம்மா வென்று வாலடித் தாட்டித் தூக்கிப்
போயதன் தாயை நாடி பொருத்தமாய் மடக்கும் நிற்கும்
ஓய்வின்றி யோடும் மீளு முயரமாய்த் துள்ளு மாடும் (௫௨)

ஆயிரக் கணக்கின் மேலே யமர்ந்ததோர் மந்தை முன்னே
நேமமாய் வாரத் திற்குள் நேர்ந்ததோர் கன்றை விட்டால்
தாயது நாடிப் பாலைத் தாவுத லைப்போல் மாண்டோர்
மாயமாய்ப் பிறந்து வந்தால் மரபுநோ யடையு மன்று (௫௩)

சொந்தமாந் தாயை விட்டுச் சுருக்கினில் நாலா பக்கம்
கன்றுக ளோடத் தாய்கள் கதறியே பின்னே செல்லும்
பந்தமுள் தாயைப் பார்த்துப் பலதிசை கூவி யோடும்
வந்திடு மபாய மென்று வருந்தியே பின்னே நாடும் (௫௪)

---

(௪௩) தபனன் - சூரியன், துருமம் - மரம், மாரி - கோமாரி,

(௫௧) தொறுவன் - இடையன், தாசி - தூணி, மருவல் - கிட்டல், பறழ் - குட்டி

(௫௩) மரபுநோய் - பழந்துன்பம்

போதகங் காத்துத் தாயும் புற்களை மேயு மாறே
யாதவன் கன்றை யெல்லா மந்தணர் வீட்டிற் சேர்த்து
மாதவன் கோகு லத்தில் மாடுகள் மேய்த்த தைப்போல்
ஏதம தின்றிக் காத்தே யிருக்குமோ ராண்டா மொன்றில் (௫௫)

மிதுனமும் நண்டின் வீட்டில் மின்கதிர் சேரு நாளில்
பதலையின் கீழ்வ னத்தில் பசுக்களை மேய விட்டுக்
கதமடர் விலங்கி னங்கள் கன்றுகோ வழிக்கு மென்று
சதனமுன் கான்ம ரத்தைச் சார்ந்துமே யிருக்க வோர்நாள் ()

நாற்றிசைச் சோலி னங்கள் நாடிபுல் மேய்ந்து வோடி
ஆற்றுநீர் பருகித் தாரி னடியிருந் திளைப்பு நீங்கி
ஏற்றமுட் கூரமி யெல்லா மெழுந்தபின் புற்கள் மேய
மேற்றிசைப் பார்த்து வாயன் மிகுநிரை மடக்கி னானே (௫௭)

குரல்குழ லிசையுங் காட்டிக் குடங்களை யொன்றாய்க் கூட்டி
மறையவர் கணக்கைப் போல மாட்டையும் பார்க்குங் காலிக்
கருவுயிர்த் தைந்தா றுள கார்பசு தன்னைக் காணான்
பொருமினன் கூவி யெல்லாப் புறமெலா மோடிப் பார்த்தான் ()

கபிலையைக் காணா னகிக் கலங்கியே படியில் வீழ்ந்து
சபமதை யோக்கப் பார்த்த சந்தமுள் கோக்கள் கத்த
சுபமதா யெழுந்து வேர்த்து சுற்றிரின் றுவைப் பார்த்து
விபரமே யாது வென்று விம்மினன் மோதிக் கொண்டான் ()

அந்தணன் முனிவா னயோ வலறியே யவன்ற னில்லாள்
சிந்தையும் நொந்து வென்னைச் சீறுவாள் பொறுக்க மாட்டாள்
பந்தமுள் சேவு கன்றும் பதறியே கதறி வாடும்
வந்தவில் விதியே தென்று வருந்தியே நிரையை நோக்கி (௬0)

வேறு

திருச்சடை யென்னுந் தென்றிசைப் பசுவே
வருத்தமு மில்லா வடமலைத் தேனே

---

(௫௫) போதகம் - கன்று, ஏதம் - துன்பம்.

(௫௬) நண்டு - கடகம், மின்கதிர் - சூரியன், பதலை-குன்று, கதம் - கோபம், சதனம் - இலை, கான்மரம் - ஆலமரம்.

பொருத்தமாய் வாழும் புண்ணிய வதியே
சருத்துள காரரங் கபிலையெங் கென்றான் (௬௧)

பாரிசா தமெனும் பசுரத் தினமே
கூறிடு முன்னூறு முலையெனும் பெண்ணே
வாரிதிச் தேனே வளரக விசையே
கோரிய பசுவைக் கூறுமீ ரென்றான் (௬௨)

சங்கட மில்லாச் சாரதிக் கன்னே
வெங்கட லக்ஷ்மீ வேதவல் லியே
பங்கஜ மானே பார்வதி யாளே
எங்குசார் பசுதா னென்றுமே கேட்டான் (௬௩)

ஊர்வசி ரம்பா வுயர்திலோத் தமையே
பார்பரிச் செல்வீ பகருமே கைையே
சீர்ரதிப் பெண்ணே சித்திராங் கதையே
கார்பசு வெங்கே காட்டுமீ ரென்றான் (௬௪)

வாசுகி தங்காய் வள்ளிதெய் வானையே
மாசிலாத் தருவே மரகத மானே
பேசிடு மைரா வதமெனுந் தாயே
கூசிடாப் பசுவைக் கூறுமீ ரென்றான் (௬௫)

பற்பல பெயருள் பசுக்களைக் கூவி
அற்புதக் காரம் பசுவினைக் கேட்க
விற்கதி ரோனும் வீழ்ந்திடக் குடபால்
பற்பல மாக்கள் பரவுமென் றயர்ந்தான் (௬௬)

வேறு

மங்கையை மடக்கி யோட்டி மாயனும் நாடு சேர்ந்தான்
இந்துவுங் குணபால் வானி லெழுந்துமே தோன்ற லானான்
சந்தையி னிறைச்சல் போலச் சதங்கயி னார்ப்பு மோங்க
வந்தன சங்க ளெல்லாம் வாய்திறந் தம்மா வென்று (௬௭)

(௬௬) வில் - பிரகாசம், கதிர் - சூரியன், குடம் - மேற்கு.
(௬௭) இந்து - சந்திரன், குணம் - கிழக்கு.

கன்றுகள் தன்தன் தாயைக் கண்டதன் பாலை யூட்ட
இன்றுகார் பசுவு மங்கே யில்லையா லதனின் பார்ப்பு
மன்றெலாங் கூவித் தேடி மந்தையைச் சுற்றி யோடிச்
சென்றுயர்ந் தோனின் முன்னே செல்லலாய்க் கதறும் வீழும் ()

விழிகளி லருவி பாய வீறிடு மெழுந்தி ருக்கும்
பழியது யாரோ வென்று பார்ப்பனின் முகத்தைப் பார்க்கும்
மொழிவது போலக் கூறும் முகமது வேற தாகும்
வழியேது வென்று பார்க்கும் வாய்திறந் தரற்றும் வோடும் (௬௯)

மந்தையை நாடும் வாடும் மாறிபின் னில்லை மோடும்
சொந்தமாந் தாயைக் காணச் சுருக்கினில் மீளும் வேர்க்கும்
அந்தமாங் கன்றி னுட னனைத்தையுங் கண்டு நூலோன்
மந்தையி லாயன் றன்னையழைத்திட யாளை விட்டான் (௭௰)

கோக்களைச் சேர்க வோட்டிக் குடவனு மக்ரா ரத்தி
லேச்கிய முகத்தி னோடு விருபிறப் பாளன் முன்போ
போக்கிய செய்தி சொல்லிப் புழுதியில் வீழ்ந்தே யாடித்
தூக்கிய குரலோ டேங்கத் தொடர்ந்தன கன்று தானே (௭௧)

ஆயனைக் கண்ட போது வலறியே கூவிச் சுற்றி
நேயமுங் கொள்வ தைப்போல் நீட்டிதன் நாவால் நக்கித்
தாயவ ளெங்கே யென்னத் தாவியே யம்மா வென்று
தாயமுங் கொண்டு வாடும் தரையிலே தாழும் மீளும் (௭௨)

கன்றதைக் கண்டு வாயன் கட்டியே கதறி வெம்ப
நன்றிலாக் கார்யம் செய்து நடிக்கிறாய் மூடா வென்றே
யந்தணன் கூறப் பாரி யதட்டியே கோவனைக் கூவிப்
பின்னறி மூடா வாடா பெற்றமுங் கொணர்வா வென்றான் ()

---

(௬௮) மன்று - வெளி, உயர்ந்தோன் - அந்தணன், செல்லல் - துன்பம்.

(௭௧) குடவன் - இடையன், ஏக்கிய - துக்கமான.

(௭௨) தாயம் - துன்பம்.

கோவினைப் பார்ப்பே னென்று குடவனும் வனத்திற் சென்ருன்
கோவின மாவலை மேய்ந்த குவட்டினி னரிவ னத்தில்
கோவினமான காராங் கூலமு மமலைப் புல் லைத்
தாவியே மேயர் கண்டங் தரித்தபோன் மணியு மாட (௭௪)

வரையிலா புனற்சூழ் மண்ணில் வந்திடு முடலுக் கெல்லா
மெரியுமோர் மயானமான விரும்பசி தன்னைப் போக்கக்
குறையிலா நிலைமுந் சோரி குடித்துவந் தைந்து நாளா
யிரையிலா தயர்ந்த வேங்கைக் கெட்டிற்று மணியி னோசை.

கேட்டதுங் களிப்பி னோடு கீறுபுல் லெழுந்து போந்தே
ஓட்டமா யோடிப் பார்த்து வொருவிரு கோவென் றெண்ணி
நீட்டியே வாலை யாட்டி நிறைந்தபல் வாயைக் காட்டிக்
கூட்டிய செந்தி னோடு குதித்தது கோவின் முன்போய் (௭௬)

கண்டது முயிர்த்து வாடி கண்சுழன் றிருண்டு நீரும்
விண்டிடச் சுற்றம் பார்ப்பை விருப்பமாய் மனதில் நாடி
வந்ததிங் கபாய மென்று வருந்திதன் விதியை யெண்ணி
நின்றிடுங் கோவை நோக்கி நெடும்புலி யுரத்துக் கூறும் (௭௭)

ஐந்துநா ளிரையே யின்றி யலிந்தவென் னெதிரில் நீயும்
வந்துமே சிக்கிக் கொண்டாய் வழுவிட முடியா துன்றல்
சிந்தையுங் குளிர வுன்றன் செழுத்திடுஞ் சதையைத் தின்று
பந்தமுட் சோரி யுண்பேன் பாரென வுறுமிப் பாய (௭௮)

தேனது மனமும் வாடித் தீப்புலி காலில் வீழ்ந்து [கன்
ஊனுனக் காவே னுண்மை யுரைக்குமென் சொல்லைத் தாங்
மானமாய்க் கொள்ளு மென்று மாழ்கிவாய் குளறி மெல்லத்
தானமேல் வந்தோ ரெல்லாந் தரைமிசை மாள்வார் மீளார் ()

---

(௭௪) குவடு - மலை, அமலை - மிகுதி, கண்டம் - கழுத்து.

(௭௫ வரை - கரை, சோரி - உதிரம்.

(௭௬) கீறுபுல் - வரிப்புலி, இரு - பெரிய.

(௭௭) உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, ஆடி - நடுங்கி.

வாழ்வுட லிளமை மூன்றும் வார்திரை குமிழே யொத்தாம்
ஊழ்வினை வியாதி சுற்றம் உலகமோ கர்ம பூமி
தாழ்விது வேண்டே னுனக் கையவென் குறைக்கி ரங்கி
காழ்மன வஞ்சங் கொண்ட கடும்புலி கிருபை செய்வாய் (௮௦)

புத்திரப் பேறே யில்லைப் பூவினிற் பிறவி கட்கு
கத்தியே நரக முண்டு நற்பத மில்லை யென்று
சத்திய வேத நாலுஞ் சாற்றிடு மதனால் யானும்
பத்தியாய்த் தான தர்மம் பண்ணியோர் சேயை யீன்றேன் ()

முப்பது நாட்க ளின்னம் முடியவு மில்லை நாதா
ஒப்பிலீர் விடை யளித்தா லோட்டமா யோடி நானும்
தப்பிலா வாழப் புத்தி தாவியென் பார்ப்புக் கோதி
ஒப்பநண் புக்கு ரைத்தே யொல்லையில் வாரே னென்ன (௮௨)

நல்லவுன் சமர்த்தை யிங்கு நாட்டினை யேடி பேதை [னுன்
வல்லவுன் பேச்சை யானும் வாய்மையென் றேற்பேன் முன்
நல்லதோ ரோரிப் பேச்சை நாகமுங் கேட்ட றிந்த
வல்லலும் வேண்டாம் நீயு மடிபெய ராகா தென்ன (௮௩)

கன்றது பெரிய தானுற் கவலையின் றிப்போ தேநான்
உன்றனுக் கிரையே யாவே னுயிர்களுக் கந்த மில்லை
இன்றுநான் வெளியை நாடி யியங்கவில் வாயிற் றாக்க
நன்றலை வென்று காலும் நடுங்கியே மடங்கி வீழ்ந்தேன் (௮௪)

அந்தணன் தனியாய்த் தோன்ற வழுதுமுன் நாரி நாட
விந்தன முன்னே சாண வெதிரினில் செக்கான் பார்க்கப்
பன்னக மாற்றான் கட்ட பல்லியும் பலவாய்க் கொட்ட
ஒண்டனுங் குறுக்கே செல்ல வொன்றுநா னினைக்க வில்லை ()

(௮௦) வார் - நீர், காழ் - வயிரம், வஞ்சம் - கொடுமை.

(௮௨) நண்பு - நேசர், ஒல்லை - சீக்கிரம்.

(௮௩) ஓரி - நரி, நாகம் - யானை.

(௮௫) இந்தனம்-விறகு, பன்னக மாற்றான்-பாம்பினெதிரி; கருடன்; ஒண்டன் - நரி.

ஆகையாற் சென்று யானு மரைக்கணந் தன்னில் மீள்வேன்
ஓகையா யனுப்ப வேண்டு முமக்கது கூடா விட்டால்
வாகையாய்ச் சத்யஞ் செய்வேன் வள்ளலே யென்று போற்றித்
தோகையுஞ் சிரமுந் தாழ்த்தித் துயரமு மீறி யோங்க (அசு)

மறைவழி தப்பிச் சென்றோன் மங்கையர் கற்ப ழித்தோ
னிறைமுனம் பொய்பு கன்றோ னிருவழக் கழித்தோன் பாவி
இறைவிருந் திருத்தி யுண்டோ னெளியவர் தமைப்ப ழித்தோன்
குறைபுனற் கங்கை யோரங் கோவதை செய்தோர் நாளும் ()

சொங்கதா யெதிரு ரைத்தோன் சூரியைக் கையி லேந்திக் |டிச்
சொன்றுயிர் பதைக்கப் பார்த்தோன் குடியடைக் கலரைக் காட்
சிந்தையுங் கலங்கச் செய்தோன் செலவுகாய்ச் சிறுவ ரோடே
யந்தணர் தமைய ழித்தோ னறிஞரை யடித்தோன் றானும் ()

கூலிகள் சொல்லிப் பின்பு கொடுத்திடா தடுத்திட் டானுங்
கேலிகள் மூப்பர் வந்தோ ரிவர்களைச் செய்தோன் றானும்
சூலியைக் கொன்றோர் சேருந் தூறுயான் சேரா விட்டால்
காலியா னடைவே னென்று கட்டுரை மொழிந்த தாங்கே ()

சத்திய மொழியைக் கேட்டுச் சலித்துமே புலியு மாங்கே
உத்தமி யிவளை நாமு மூர்தனக் கனுப்பா விட்டால்
நத்தியே பாவஞ் சேரும் நரகமும் வாய்க்கு மென்று
கத்துமுன் கன்றைப் பார்த்துக் கடுகிநீ வாவென் றோத (கூ0)

மரகத ராஜ னென்னு மன்னவா கேள்யான் சென்றே
உறவினற் குரைத்துக் கன்று கூட்டிடப் பாலுந் தந்தே
அறமெலா மோதி வாழ அமரிக்கை புத்தி கூறி
விரைவினில் வருவேன் தாங்கள் விரும்பியிங் கிருமென் றோதி ()

---

(அசு) ஓகை - சந்தோஷம், தோகை - வால்.

(அஅ) சூரி - கத்தி, கையடை - அடைக்கலம், அறிஞர் - மேலோர்.

(அகூ) சூலி - கர்ப்பிணி, தூறு - பழி, காலி - பசு, கட்டுரை - சத்தியம்.

விடைகோடு ஆரை நாடி வேகமா யோடி யோடிக்
கடைவனம் நீங்கக் கன்று கதறிடு மோசை கேட்டே
யடையும்வே றபாய மென்று வலறிடாச் செல்லுங் காலை
யிடையனும் பார்த்துக் கூட்டி யிருடியின் முன்னே விட்டான் ()

கன்றுதன் தாயை நாடிக் கருத்துட னுற்று நோக்கி
இன்றுநீ யெங்குச் சென்று யெந்தவ மறந்தா யோதான்
உன்னுடல் முழுது முள்ளு முதிரமும் நடுக்கங் கண்டே
யின்னதென் றதனை நன்று யியம்புவா யம்மா வென்ன (க௩)

வனத்தினிற் புதரில் மேயும் வடிவென்று கூறிப் பின்பு
கனத்துட னமுத மீய்ந்து கன்றையும் நாவால் நக்கிச்
சினத்தையுந் தவிர்த்து நீயு மினத்தினர் சொல்லைக் கேட்டுக்
கனத்துடன் வாழ்வா யென்று காவியு முரைத்துப் பின்பு (க௪)

உறவின ரருகிற் சென்றே உயிர்த்துகண் ணுருகுத்துக்
குறையெலாங் கதறிக் கூறிக் குறித்தசூள் காக்க வின்றே
இரைபுலிக் காக வேண்டு மென்னுயிர்க் கன்றை நீங்கள்
முறையுடன் காப்ப துங்கள் முறையெனப் பகருங் காலை (க௫)

சுந்தரச் சுரபி யெல்லாஞ் சோர்ந்துமே மனம்பு ழுங்கி
யந்தாற் பசுவை நோக்கி யலறியே யம்மா வென்று
வந்தவிவ் விபத்து நீக்க வழியெது வென்று முன்னி
மந்தையில் சிலமுன் வந்து மறுத்திதை மொழிந்த தம்மா (க௬)

தந்திரம் பலவாய்க் கூறித் தாவியிங் கடைந்த பின்பு
மந்திரப் புலிக்காய்ச் சென்று மாள்வது நீதி யல்ல
சிந்தைநீ வருந்த வேண்டாம் சேர்ந்தினத் தோடி ருந்தால்
மந்தையை நாடா நாடில் மாண்டிடு மென்று கூற (க௭)

---

(க௨) இருடி - பிராமணன்.

(க௫) உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, உருத்து - சிந்தி, சூள் - சத்தியம்.

(க௭) மந்திரம் - குகை.

ஆணையு மிட்டு வந்தே யதின்படி செல்லா விட்டால்
வேணையுன் பழிகள் சேரும் விண்ணவ ரிகழ்வார் நானும்
நாணமுஞ் சொள்ள நேரும் நம்மவர் நகைப்பார் பிந்தி
மானமு மழிந்து மீளா மைநர குய்க்கு மையோ (௩௯௯)

மண்ணினில் வந்தோ ரெல்லா மண்ணிலே மாள்வ துண்மை
பண்ணைவென் சபதங் காச்சில் பாரினில் நம்ம வர்க்குப்
புண்ணியம் பெருமை சேரும் புகழுமே தசபா லோங்கும்
கண்ணிய மெனக்குண் டென்று கானகம் நாடிச் செல்ல ()

கன்றது கேட்டு விம்மிக் கதறியே தாயைப் பார்த்தே
இன்றுநீ யிறந்து விட்டா லென்றனக் குறவு மில்லை
உன்னுடன் யானும் வந்தென் னுயிரையு மிழப்பே னென்று
முன்னமே யோடுங் கன்றை முரிக்கோ தடுத்துக் கூறும் (௪௦௦)

அருமையாந் தாய்து றந்தா லன்னவர்க் கு  க மெல்லாம்
பெருமையாந் தாயா மென்று பேசிடும் நூலைப் போலக்
குருகுவுந் தாயி முந்தாற் கோவேலா முந்தா யென்று
பரிவுடன் கூட்டிச் செல்லப் பசுவுமே மறைந்த தம்மா. (௪௦௧)

சத்தியங் காக்கச் செல்லுஞ் சக்கர மோர்பா லோங்க
த்திய பார்ப்பு சுற்றம் நழுவிட வுழுவை தன்றுள்
செத்திடச் செல்லுந் துக்கஞ் செறிந்தொரு பாலு மோங்கப்
த்தியாய்ப் பரமன் றன்னைப் பணிந்துவவ் வரைபாற் சென்று()

தொகையான் வருவே னென்று துன்னிய பசிய டக்கி
யாகையாய்ப் பார்த்தி ருக்கு முக்கிரப் புல்லே கோவாழ்

---

(௩௯௯) புன் - அற்பம், மை - இருள், உய்க்கும் - சேர்க்கும்.

(௪௦௦) நூல் - வேதம், குருகு - அழகு

(௪௦௨) சக்கரம் - பெருமை, நழுவிட - நீங்க, உழுவை - புலி, சறிந்து - அடர்ந்து, வரை - மலை.

(௪௦௩) துன்னிய - நெருங்கிய.

சாகையா னடைந்து கண்டு சங்கதி யாவுங் கூறி
வேகையா யடைந்தே னிங்கு வெறுத்திடா தருந்து மென்ன ()

கொடுவரி குகையை விட்டுக் கோவெதி ரெழுந்து போந்து
வடுவிலாத் தேனே யுன்னை வாட்டுதல் பாப மாகுங்
கெடுதியு மெனக்கு நேருங் கேட்டவர் பழிப்பா ராவண
நடுவிலே காப்பார் தன்னை நாதனுங் காப்பா னுண்மை (௧௦௪)

தூளுநீ செய்த தைப்போற் சுருக்கினில் வந்தா யம்மா
துவளையுங் கொண்டு நீயுஞ் சுரபியாய் நின்ற தாலே
தூளுளோர் தமைய ழித்தாற் சொர்க்கமுங் கிட்டா தானுற்
கேளுடன் முளையும் வாழ மீட்டமு மடைவா யென்ன (௧௦௫)

புலிக்கிரை யாகப் போவே னென்றுமே புகன்று வந்தே
ஒலிமணி வேய்ந்த காலி னெருங்கினிற் றிரும்பிச் சென்றுற்
கிலியுடன் வந்தா யென்றுங் கேட்டசா தனையா ளென்றும்
வலிவுட னிசழ்ச்சி கூறும் வனங்குவேன் கொல்வீ ரென்ன ()

சத்திய ரனைங்கு தேனைச் சங்கரித் தவர்க ளெல்லாம்
நத்தியே நரகஞ் சேர்வா ராகையால் நீயம் மூன்றே
டுத்தம கபிலை யாயு முறுவதா லந்தோ வந்தோ
சத்திய முன்னைக் கொல்லேன் சாதிசேர்ந் திருப்பா யென்ன ()

என்னிட நிணமுஞ் சோரி யின்றுனைக் களித்தே னுண்மை
தன்மமும் பொய்ய தாகுந் தாவிநீ யருந்தா விட்டால்
இந்தநற் சிலையின் மேலே யிடித்தென துவ்வி யாவி
பொந்தியை விட்டு நீக்கப் புதவனென் றெழுந்த தாங்கே (௧௦௮)

---

(௧௦௩) சாகை - இடம், வேகை - விரைவு.

(௧௦௪) கொடுவரி - புலி, வடு - குற்றம், நடு - பூமி.

(௧௦௫) சுரபி - பசு, கேள் - பந்துக்கள், முளை - பிள்ளை, ஈட்டம் - கூட்டம்.

(௧௦௮) நிணம் - சதை, சோரி - உதிரம், உவ்வி - சிரம், பொந்தி - காயம்.

தேனது மொழியைக் கேட்டுத் திகைத்துமே வேங்கை வாட
மீனுகள் மறையப் புட்கள் பிளிறலும் நற்பா னோங்கப்
பானுவுங் கூல துவளப் பார்க்கவே மனம கிழ்ந்து
வானிலே பரவை விட்டு வந்தனன் குணபாற் றன்னில் (௧0௯)

பசுவுமே பாறை மீது படிந்திட வுச்சி மோத
நிசியுமே நீங்கப் பாய்மா நின்றன மெய்வி திர்ப்ப
விசும்பினிற் றேவர் சூழ விமலரு மூன்று பேரும்
நசுவிலா வூர்தி யின்மேல் நாரிக ளோடு நின்றார் (௧௧0)

மலர்மழை பொழிந்தார் விண்ணோர் மன்னவர் மகிழ்ந்து சேர்ந்
பலர்துதி செய்தார் கோவின் பக்தியின் பெருமை யென்றார் [தார்
சிலர்புலி நசிநா ளென்று சேர்ந்தனர் காம்பி நாட்டு
வலவரும் நெருங்கி யாங்கு வன்புலி கோவுங் கண்டார் (௧௧௧)

பெற்றமும் புலியும் நின்று பிரான்களைக் கண்டு போற்ற
வுற்றவும் பழிகள் நீங்க வுயர்வுதுன் மேலாய்க் கொண்டீர்
சிற்றறி வுள்ள நீங்கள் சீக்கிரம் விமான மேறிப்
பொற்பத மடைவி ரென்று புகன்றுவா னடைந்தா ரீசர் ()

விரைமல ரூர்தி யூர்ந்து வெல்லுமா கபில செல்லப்
புரையிலா ரவிகு லத்துப் புகழரிச் சந்த்ர னென்போன்
கறையிலா மனத்த னாகிக் கட்டுரை சபதங் காத்து
மறையொலி வீட டைந்து மன்னனும் வாழ்ந்தான் மன்னா ()

சத்திய முடையோர் வாழ்க்கை சங்கட மேதுவந் தாலு
மித்திரன் முன்னே துகினஞ் சிதைத்தலைப் போல நீங்கும்

---

(௧0௯) மீன் - நட்சத்திரம், பிளிறல் - கூச்சல், பானு-சூரியன், பரவை - கடல்.

(௧௧0) நிசி - இரவு, பாய்மா - புலி, விதிர்ப்ப - நடுங்க விமலர் - தேவர், நசு - கெடுதல்.

(௧௧௩) ஊர்தி - விமானம், வெல்லுமா - புலி, புரை - குற்றம், ரவி - சூரியன்.

(௧௧௪) மித்திரன் - சூரியன், துகினம் - பணி.

உ

வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் சரித்திர சங்கிரகம்.

தி. மு. இராஜம் முதலியாராலும்,
சை. சி. நடேச முதலியாராலும்,
எழுதப்பட்டு

சென்னை திருவல்லிக்கேணி
ஸ்ரீ டராஜ பக்தஜன சபையாரால்
வெளியிடப்பட்டது.

1920.

இதன் விலை, அணா-2.

# புத்தக விளம்பரம்.



| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 1. இந்நூலாசிரிய ஸ்ரீ. அருணகிரிநாத சுவாமிகள் சரித்திர சங்கிரகம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 2. ஷெ. சுவாமிகள் அருளிச்செய்த கந்தரநுபூதி சரித்திரக் குறிப்புடன் ... ... ... | 0 | 0 | 6 |
| 3. கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி ஆகிய இம்மூன்றும் ஒரே புத்தகம் ... ... | 0 | 2 | 0 |
| 4. தமிழ்ப்புலவர் சரித்திரம், முதற்பாகம் இதில் ஒட்டக்கூத்தர், படிக்காசர், இரட்டையர்கள் முதலிய தெய்வப்புலவர்களின சரிதங்கள் அடங்கியுள்ளன, இவை கோவை. சி. கு. நாராயணசாமி முதலியாரால் எளியநடையில் எழுதப்பட்டவை. ... | 0 | 8 | 0 |
| 5. தமிழ் நாவலர் சரிதை (ஷெயார் பதிப்பு) ... | 0 | 4 | 0 |
| 6. பொய்யாமொழிப்புலவர் சரிதம் (ஷெயார் பதிப்பு) | 0 | 2 | 0 |
| 7. பரத்தையர் கேண்மை விலக்கு (இது மிகவும் உபயோகமான தொருநூல் (ஷெயார் பதிப்பு) ... | 0 | 4 | 0 |
| 8. திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் மூலமும் உரையும் இரண்டும் ஒரே புத்தகம் இது சைவசித்தாந்தம் படிப்பவர்களுக்கு மிகவும் உபயோகமானது (காஞ்சி நாகலிங்க முதலியார் பதிப்பு) ... | 1 | 0 | 0 |

மேற்சொல்லிய புத்தகங்களைத்தவிர தேவாரம், திருவாசகம், திருச்சிற்றம்பலக்கோவையார் முதலிய பன்னிரு திருமுறை நூற்களும் கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், தலபுராணங்கள் முதலிய இன்னும் பல சைவசமய நூற்களும் வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதினால் சுத்தப்பதிப்பாய் வாங்கியனுப்பப்படும். மற்ற விவரங்களுக்கு கடிதம் எழுதித்தெரிந்து கொள்ளவும்.

சை. தி. நடேச முதலியார்,
நெம்பர் 40, தோப்பேட்டைத் தெரு,
சைதாப்பேட்டை சென்னை.

வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் சரித்திர சங்கிரகம்.

இது

தி. மு. இராஜு முதலியாராலும்,
சை. தி. நடேச முதலியாராலும்,

எழுதப்பட்டு

சென்னை திருவல்லிக்கேணி
ஸ்ரீ நடராஜ பக்தஜன சபையாரால்

சென்னை
கலாரத்நாகரம் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1920 விலை, அணா-2

# முன்னுரை.



தமிழ் வீட்டு நூலெனப்படுந் தெய்வத் திருப்புகழ் இக்காலத்தி லெங்கும் யாவராலும் பொன்னே போற் போற்றப் படுவதும், அறுமுகச் சிவனார் அருட்பாட்டினையும், அப்பெருமானை வழிபடு மாற்றினையும் நம்மனோர் அறிந்துய்வான், தமது சொல்லாலும் செயலாலும் நன்குவிளக்கிக் காட்டியருளிய மெய்ஞ் ஞானியாகிய ஆசிரியர் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளது சரிதங்கள் மாத்திரம பலராலவிகாரமுறப் பொய்க் கதைகள் பல படப்புனையப் பட்டு வழங்கப்படுகின்றன. அவை அப்பெரியாரது அருட் டன்மைக்கும் ஆற்றலுக்கும் பெரிதும் முரண் படுகின்றன; மேலும் அவை தங்குலத்தி லபிமானமும் பிறகுலத்தில் வைடம்மியமு முள்ள சில்லோராலேயே அங்கீகரிக்கப் படுகின்றன.

ஆகவே, அப்பொய்க் கூற்றுக்களை யொழித்து, அவரது உண்மைச் சரித்திரம் நந்தமிழுலகம் உவக்க உலவ வேண்டுமென்னுங் கருத்தானே இனிது எழுதிமுடித்திருக்கின்றோம். இதனை அறிஞர் யாவரும் ஏற்பார்களென்றே நம்புகின்றோம்.

இச்சரித்திரம் எழுதி வரும்போது உடனிருந்து பல விதத் தாலும் உதவிசெய்த எமது நண்பர் ம-ா-ா-ஸ்ரீ மா. அ. கனகசபை முதலியார் அவர்களுக்கும் எமதன்பார்ந்த வந்தனத்தைச் செலுத்தக் கடமைப் பட்டுளோம்.

இப்படிக்கு,

தி. மு. இராஜு முதலியார்.

சை. தி. நடேச முதலியார்.

# பொருளடக்கம்.

வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் சரித்திர சங்கிரகம்.



## அருணகிரிநாதர் துதி.

### ஆசிரிய விருத்தம்.

கார்முகில் வண்ணனுங் கமலமலர் வாசனுங் காணவரிதாகி நின்று, கல்லாலமர்ந்தவன் கருணைபெறு மாதர்பாற் கந்தவேட்டுணை வராகச்,- சூர்தனை யொழிக்கவே தோன்றிமுசு மாமுகன்றாண்டாப் படைத்துணைவராய்ச், சோணாடுமேவிதரு வாணாடுமாண்டநவ சோர் விலாக் குந்தர்மரபிற்,- சீர்பரவு திலகமாய்த் திருவருணையம்பதியில் சிவனருளினாலுதித்துத், தென்கடல்கடந்து முருகக்கடல் படிந்து லகு செந்நெனற்பயிர் தழைக்க,-வார்குவடு தொறுநின்றுவான் திருப் புகழ்மாரி வருடித்தவருணகிரிமா, வள்ளன் மேகத்தினது வண்டி ருப்புகழ்ப்பாடி வனசமா மலர்சூடுவாம்.

## பிறப்பிடம்.

செந்தமிழ் மணக்கும் நந்தம் திருநாடாம் சோழ நாட்டின் வடமேற் புறத்ததாய நடு நாட்டில்,

" துவக்கற வறிந்து பிறக்குமா ரூரும் துயர்ந்திடாதடைந்து காண்மன்றும், உவப்புடன் நிலைத்து மரிக்குமோர் பதியும் ஒக்குமோ நினைக்குநின்னகரை." (சோணசைலமாலை)

என்று நினைக்க முத்தியளிக்கும் நிர்மலப்பதி யெனப் போற்றப் பெற்றதும், அரியுமயனுந் தாந்தாம் பரமென் றிறுமாந்து முறையே ஏனத்தின் வடிவுகொண்டு அடி தேடி வருவலென அவனியெலா மிடந்தும், எகினத்தின்

வடிவுகொண்டு முடிதேடி வருவலெல்லை மூதண்ட மிசை பறந்தும் காணரிய வொரு பொருளாஞ் சோதிசைலத்தைத் தன்னகத்தே கொண்டுள்ளதும், தேவர், முனிவர், சித்தர், யாவராலுந் துதிக்கப்படுஞ் சிவலிங்க மூலகாரணநிலயமாக வுள்ளதனைச் சைவ மகாபுராணத்தா னெடுத்துரைக்கப் படுவதும், வல்லாள வேந்தனுக்குச் சிவபெருமான் புத்திராரா யவதரித்து அநுக்கிர கித்ததும், பிருதிவி முதலிய பஞ்ச பூதத்தலங்களுள் தேயுத்தலமாய் விளங்குவதும், பார்வதிதேவியார் தவம்புரிந்து இடப்பாகம் பெற்றதும், வச்சிராங்கத பாண்டியன், சலாதரன், காந்திசாலி முதலியோர் வலம்வந்து முத்தி பெற்றது முதலான பல அற்புதச் சரித்திரங்கள் நிகழப் பெற்றதும், வாயு நகரம், கௌரிநகரம், ஞானநகரம், சிவலோகபுரி, முத்திபுரி, தமலேச்சுரம், தக்ஷிண கைலாயம் முதலான சிறப்பு நாமங்களையுடையதும், பெண்ணையாறு, சேயாறு, கமலை நதியாதிய தீர்த்தங்களை யுடையதுமான தெய்வப்பதியெனக் கூறப்படுவது திருவண்ணாமலை.

## ஜனனப்பிரபாவம்.

அப்பதியிலே, சற்றேறக் குறைய 440. வருடங்களுக்கு முன், குந்தாயுதனே குணபரஞ் சுடரென்றெந்நாளும் வந்தனை புரிந்து வதியும் பெருமை மிக்க செங்குந்த மரபில், நல்லொழுக்கமும் நற்குணமு முடைய மாசிலாதோர் சற்குடும்பத்தில், * காதன் மனையாளுங் காதலனு மாறின்றிப் பிள்ளையெனும் பேற்றிற்கே பேரவா வுடையோராய் நமது அம்மை யப்பராகிய அருணாசலேசுவரரையும், உண்ணாமுலையம்மையாரையும், கருணையங் கடலாகிய

* தந்தையார், தாயார்களது பெயர்முறையே மூதண்டநாத முதலியா ரென்றும், முத்தம்மையா ரென்றும் கன்னபரம்பரையானே கூறுப. தக்கவாதார மின்மையால் விடுத்தாம்.

